# அநுபந்தம்

சுந்தரர் வரலாற்றுச் சம்பந்தமாய்ப் பிற நூல்களி னின்று கிடைக்கும் சில முக்கிய குறிப்புக்கள்:

## I

### (திருவிசைப்பா-திருவாலியமுதனார் அருளியது)

நெடிய சமணு மறைசாக் கியரு நிரம்பாப் பல்கோடிச்
செடியுந் தவத்தோ ரடையாத் தில்லைச் சிற்றம் பலந்தன்னுள்
அடிக ளவரை யாரூர் நம்பி யவர்க ளிசைபாடக்,
கொடியும் விடையு முடைய கோலக் குழக னாடுமே.

[ஆரூர்நம்பி இசைபாடப் பெருமான் ஆடினர் என்னும் அரிய விடயம் இப் பாடலால் தெரிகின்றது.]

## II

ஞான ஆரூரரைச் சேரரை யல்லது நாமறியோம்
மானவ ஆக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலு மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற்பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே.
—நம்பியாண்டார் நம்பி-திருத்தொண்டர் திருவந்தாதி. 86.

சுவாமிகள் மாநுட ஆக்கையொடுங் கயிலை சென்றன ரென்பது இதனாலும்,

"களையா உடலோடு சேரமான் ஆரூரன்
விளையா மதமாறா வெள்ளானை மேல்கொள்ள
முளையா மதிசூடி மூவா யிரவரொடும்
அளையா விளையாடும் அம்பலம்நின் னாடரங்கே."

எனவரும் திருவிசைப்பாவினாலும் தெளிவுறப் பெற்றாம்.

## III

தேவாரத்திலும், திருவந்தாதியிலும், பெரிய புராணத்திலுட 'சுந்தரர்' என்னும்பெயர் குறிக்கப்படவில்லை. ஆதலின், "சுந்தரர்," "சுந்தரமூர்த்தி" என்னுந் திருநாமங்கள் சுவாமிகள் கயிலையிற் கொண்டிருந்த 'ஆலாலசுந்தரர்' என்னும் திருப்பெயர்க் காரண மாக வந்தன போலும். கயிலையிலிருந்தபோது இறைவனுக்குச் சுந்தரர் செய்துவந்த திருத்தொண்டு கவரிவீசுதல் என்பது,

"அந்தகனை அயிற்சூலத் தழுத்திக் கொண்டார்
அருமறையைத் தேர்க்குதிரை யாக்கிக் கொண்டார்
சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்
சுடுகாடு நடமாடு மிடமாக் கொண்டார்
மந்தரநற் பொருசிலையா வளைத்துக் கொண்டார்
மாகாளன் வாசல்காப் பாகக் கொண்டார்
தந்திரமந் திரத்தரா யருளிக் கொண்டார்
சமண்தீர்த்தென் தன்னையாட் கொண்டார் தாமே."

என்னவரும் அப்பர் சுவாமிகள் திருப்பாடலால் தெரியக் கிடக்கின்றது. [6-96-5]

## IV

(1)

* வேட்டுவ வேட மெடுத்து வழித்துணை மேவியிளங்
காட்டு முருங்கை யிலைகாய்நெய் பெய்து கறிசமைத்துப்
பாட்டு முழக்குவன் றொண்டருக் கன்னம் படைத்துநரை
மாட்டுதிப் போன்துடி சைப்பதி யுங்கொங்கு மண்டலமே.

—கொங்கு மண்டல சதகம்.

(2)

* சொல்லருங் கிராத வேடந் துணைவியுந் தானுங் கொண்டு
மெல்லவே நடந்து வந்து மேதினி புகழ வன்று
ஒல்லுநர் தம்மை நோக்கி யுயங்குத லொழித்தி யென்று
வல்லுரர் தன்னி னல்ல வழிதனைக் காட்டி யாங்கே.

* கடிய தான முட் கான முருங்கையி
னெடிய காயட காதிய நெய் சுவைப்
பொடி விராய பொறித்த புளிக் கின
முடிவி லாத முதிர்கறி பாகரோ.

—துடிசைப் புராணம்.

(3)

* நெட்டிசையின் தமிழ்முனிபூ சனையுகந்த
துடிசையில்வாழ் நிமலற் போற்றி
அட்டில்வினைப் புனமுருங்கை யடகவிநல்
லமுதுவிருந் தளிக்க வுண்டார்.

—அவிநாசிப் புராணம்.

---

* இது இறைவன் வேட்டுவர் உருக்கொடு ஆரூரருக்கு முன் தோன்றி வழிகாட்டித் துடியலூர்க்குள் புகுந்த சரித்திரத்தைக் குறிக்கின்றது. "செங்கண் வேடனு யென்னெடும் வந்து மருவி

* கிழவே தியவடி வாகி விருத்தையைக் கிட்டியென்றன்
அழகாகு மக்க ளடகுகொண் டம்பொ னருடி யென்றேற்
றெழுகாத லாற்றமிழ் பாடிய சுந்தரற் கீந்தவொரு
மழுவேந் தியவிகிர் தேசுரன் வாழ்கொங்கு மண்டலமே.
—கொங்கு மண்டல சதகம்.

* கொள்ளைவண் டிமிரு நாட்பூங் கோதையோர் பாகர் முன்பு
கள்ளமி லுள்ளத் தன்பு கனிந்துள கிழவி யார்பாற்
பிள்ளைக ளீடு காட்டிப் பெற்றசெம் பொன்னை யெல்லாம்
தெள்ளிய தமிழ்ப்பாச்சொன்ன திருத்தொண்டர்க்
குவந்தளித்தார்.
—வெஞ்சமாக்கூடற் புராணம்.

# VI

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

வழிவிடுத்த தொரு நதி[1]; யொண் பொன் கொணர்ந்த
தோர்[2] ஆறு; வரும்பொன் வாங்கிக்
கழிகொடுத்த தொரு [3]பொய்கை; யளித்ததொரு
[4]கயங்கரவு கரந்த சேயை
மொழிவசத்திற் கவையோ, இப்[5]பரவை
யிணங்குவதரிது முதல்வா என்று
விழிதரித்தும் அரிகாணாப் பாதனைத்தூ
தேவினனை விழைந்து வாழ்வாம்.
—திருக்கழுக்குன்றப் புராணம்.

---

ஞன்தனை" என வாளொளி புற்றூர்த் தேவாரத்தில் வருவதும் ஈண்டு கவனிக்கற்பாலது. துடியலூரில் முருங்கைக்காய், முருங்கை யிலை இவைதமைக் கறிசெய்து சுவாமி சுந்தரருக்கு விருந்து அளித்ததும் இதனால் தெரிகின்றது.

*வெஞ்சமாக்கூடல் என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் விகிர் தேசுரர், தம்மாட்டுப் பத்தி முதிர்ந்த கிழவியிடம் தமது பிள்ளைகளை ஈடுகாட்டிப் பொன் வாங்கிச் சுந்தரருக்கு அளித்த சரித்திரத்தை இப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

1. திருவையாற்றுக்குப் போம் வழியிலுள்ள ஆறு. 2. மணிமுத்த நதி. 3. திருவாரூர்க் கமலாலயம். 4. திருப்புக்கொளியூர் ஏரி. 5. கடல் என்னும் பொருள்படும் பரவை (நாச்சியார்.)